கழக வெளியீடு: ௲௨௬











சிறுவர்க்கு இன்பந் தரும்
சிறிய கதைகள் அடங்கியது





திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி-6. சென்னை-1.
1964




# பதிப்புரை

எளிய இனிய சிறுகதைகளே சிறுவர் உள்ளத்தை நன்கு கவர்கின்றன. அதுவும், முத்துப் போன்ற பெரிய எழுத்துக்களில் அழகழகான விளக்கப் படங்களுடன் உயர்ந்த தடித்த காகிதத்தில் பெரிய வடிவில் சிறுகதை நூல்கள் கவர்ச்சியாக வெளிவருமானுல், இன்னும் அவர்கள் உள்ளத்துக்கு மிக்க கிளர்ச்சி உண்டாகும். அதன் வாயிலாகக் கல்வியில் அவர்களுக்கு ஊக்கமும், விருப்பமும் ஏற்படும்.

ஆங்கிலத்தில் அம்முறையில் பலவகையான நூல்கள் வெளிவந்திருக்கின்றன. தமிழ்ச்சிருர் நலங் கருதி நாங்கள் அவ் வகையிலும் சில அழகிய நூல்களை வெளியிட நினைத்து, கதை விருந்து, கதைக் கொத்து என்ற தலைப்புக்களில் இரண்டு நூல்களை முன்னரே வெளியிட்டுள்ளோம். மூன்ருவது நூலாக இக்கதைச் செல்வம் வெளிவருகின்றது. இதனையும் பள்ளி ஆசிரியர்களும், பெற்ருேர்களும் தங்கள் சிருர்களுக்கு வாங்கிக் கொடுத்து இன்பம் ஊட்டுவார்களாக.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

கழகக்

# கதைச் செல்வம்

## க. எலியின் வால்

ஒரு பூனை பசியால் ஓர் எலியின் வாலைக் கடித்தெடுத்துத் தின்னப் போயிற்று.

அப்போது எலி,

‘ அருமைப் பூனையே, அருமைப் பூனையே
அறுத்த வாலைத் திருப்பித்தர அருள் புரிவையே,’

என்று கேட்டது.

பூனை, ‘என் பசிதீரப் பால் தந்தால் நான் வாலைத் தருவேன்,’ என்றது.

உடனே எலி பசுவினிடம் போய்,

‘பசுவே, பசுவே, பால் தா.
பூனை பாலைக் குடித்துப் பின்னால்
அறுத்த வாலைத் திருப்பித்தர அருள் புரிவையே,‘

என்று கேட்டது.

பசு ‘என் வயிறு நிறைய வைக்கோல் தந்தால் நான் பால் தருவேன்,’ என்றது. உடனே எலி உழவனிடம் போய்,

'அருமை உழவா, வைக்கோல் தா,
பசு வைக்கோல் தின்று பால் தரப்,
பூனை பாலைக் குடித்துப் பின்னால்
அறுத்த வாலைத் திருப்பித்தர
அருள் புரிவையே,'

என்றது. உழவன் 'நான் அப்பந் தின்று வயலுக்குப் போய் வைக்கோல் கொண்டுவரவேண்டும். எனக்கு



அப்பந் தா,' என்றான். உடனே எலி அப்பக்காரனிடம் போய்,

'அப்பக்காரா, அப்பம் தா,
உழவன் அப்பந் தின்று வைக்கோல் தரப்,
பசு வைக்கோல் தின்று பால் தரப்,
பூனை பாலைக் குடித்துப் பின்னால்
அறுத்த வாலைத் திருப்பித்தர
அருள் புரிவையே,'

என்றது. அப்பக்காரனுக்கு இரக்கம் வந்து கொஞ்சம் அப்பம் கொடுத்தான். எலி அதை மென்று விடாமல் உழவனிடம் கொண்டுபோய்க் கொடுத்தது.

உழவன் அதைத் தின்று களிப்புடன் வயலுக்குப் போய் வைக்கோல் கொண்டுவந்து கொடுத்தான்.




பசு வைக்கோலைத் தின்று வயிறு நிறைந்ததனால் பால் கொடுத்தது. பூனை பால் குடித்துப் பசி தீர்ந்ததனால் எலியின் வாலைத் திருப்பிக் கொடுத்து விட்டது. எலி வாலைத் திரும்ப ஒட்டவைத்துக் கொண்டு மகிழ்ச்சியடைந்தது.

### அருஞ் சொற்கள்

| | | |
|---|---|---|
| **அப்பக்காரன்** | **களிப்பு** | **மகிழ்ச்சி** |
| **அருள் புரி** | **நிறைய** | **மென்றுவிடாமல்** |
| **அறுத்த** | **பசி தீர** | **வயிறு** |
| **இரக்கம்** | **பசி தீர்ந்து** | **வைக்கோல்** |

---

## உ. சொன்னதைச் செய்யும் சின்னுன்

சின்னுன் கீழ்ப்படிதலுள்ள பையன். சொன்னதைச் சொன்னபடி கேட்பான். ஆனல் அவனுக்குச் சமயத்துக்குத் தக்கபடி ஆய்ந்தோய்ந்து செய்யும் அறிவில்லை.

அவனுக்கு அவன் தாயார் அறிவு புகட்ட விரும்பினள். எனவே அவனைப் பக்கத்துத் தெருவிலுள்ள பாட்டி வீட்டிற்கு அனுப்பினள்.



அன்று மாலை சின்னுன் வீட்டிற்கு வரும்பொழுது அவன் பாட்டி அவனிடம் ஓர் ஊசியைக் கொடுத்து, அதனை வீட்டுக்குக் கொண்டுபோய் அவன் தாயிடம் கொடுக்கும்படி சொன்னுள்.

போகும் வழியில் ஒருவன் வைக்கோற் கட்டு ஒன்று கொண்டுபோனுன். சின்னுன் அவ் வூசியை வைக்கோற்கட்டில் குத்தி வைத்து, 'வீட்டுக்குப் பக்கத்தில் போனபின் எடுத்துக்கொள்ளலாம்,'

என்று நினைத்தான். ஆனால் வீட்டுக்குப் பக்கம் வந்த போது அவ் வூசியைக் கண்டுபிடிக்க முடியவில்லை.



இதைக் கேட்டதும் சின்னன் தாய், 'நீ என்ன முட்டாளா யிருக்கிறாய்? அதனை உன் சட்டையில் ஏன் செருகிக் கொண்டு வரக்கூடாது,' என்றாள். 'இனி அப்படிச் செய்கிறேன்,' என்றான் சின்னன்.

இரண்டாம் நாளும் சின்னன் பாட்டி வீடு சென்றான். பாட்டி அன்று வீட்டிற்குக் கொண்டு போகும்படி ஒரு சிறு கத்தியைக் கொடுத்தாள். சின்னன் அதைச் சட்டையில் செருகிக்கொண்டு வீட்டுக்கு வந்தான். அதனால் சட்டை கிழிந்ததோடு கத்தியும் எங்கோ விழுந்துவிட்டது.

இவ் விவரம்கேட்ட தாய், 'நீ என்ன முட்டாளா யிருக்கிறாய்? அதனைச் சட்டைப் பையிலேதானே வைத்துக்கொண்டு வரவேண்டும்?' என்றாள். சின்னன், 'சரி; இனி அப்படியே செய்வேன்,' என்றான்.

மூன்றாம் நாள் பாட்டி ஒரு நாய்க்குட்டியைக் கொடுத்தாள். சின்னன் அதனைச் சட்டைப் பைக்குள் திணித்தான். நாய்க்குட்டி 'வீல், வீல்' என்று

கத்திற்று. ஆயினும் சொன்னதைத் தட்டக்கூடா தென்ற நினைவுடன் சின்னான் அதனை அமுக்கிப் பையினுள் வைத்துக் கொண்டு வந்தான். நாய்க் குட்டி மூச்சுவிட முடி யாமல் திணறி இறந்து போயிற்று.



இதைக் கேட்ட தாய் வருத்தமுற்று, 'என்ன இவ்வளவு தெரியாமல் இருக்கிருயே! நாய்க்குட்டியின் கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டி அதனைக் கையில் பிடித்துக்கொண்டுதானே வர வேண்டும்?' என்ருள். சின்னன், 'சரி அம்மா! இப் போது தெரிந்தது. இனி அப்படியே செய்கிறேன்,' என்ருன்.

அதன்பின் ஒரு நாள், பாட்டி சுவையுள்ள அப்பம் ஒன்று செய்து 'வீட்டுக்குக் கொண்டு போ,' என்று கொடுத்தாள். சின்னன் அதனை ஒரு கயிற் றில் கட்டித் தெரு வழியாக இழுத்து வந்தான். அப் பம் மண்ணுனதோ டன்றி நாய்களும் அதனைத் தொடர்ந்து கடித்துத் தின்றுவிட்டன.

சின்னன் தாய் இதைக் கேட்டதும் நகைத்து, 'உன்னைப்போல் கோமாளி யார்? அதை நன்ருய்த்

தாளில் பொதிந்து தலையில் வைத்துக்கொண்டு வந்தால் என்ன?' என்றாள். சின்னான் சற்றுத் தயக்கத்துடன், 'இனி அப்படிச் செய்யத் தவறமாட்டேன்,' என்றான்.

மறுநாள் பாட்டி கொஞ்சம் வெண்ணெயைச் சுட்டிக் காட்டி, 'அதை வீட்டிற்கு எடுத்துக்கொண்டு போ' என்றாள். சின்னான் அதை ஒரு தாளில் பொதிந்து தலைமீது வைத்துக்கொண்டு புறப்பட்டான். வெயில் நேரமானதால் வெண்ணெய் உருகித் தலையெல்லாம் வழிந்து தோள்களிலும் சட்டைகளிலும் ஒழுகிற்று. கண்களும் வெண்ணெய் உருகிக் கசிந்ததால் கரிக்கத் தொடங்கின. இவ்வளவு துன்பங்களுக்கிடையில் வெண்ணெய் பொதிந்த தாள் வீடு வந்து சேர்ந்தது. உள்ளே வெண்ணெய் மட்டும் இல்லை.

இந்தத் தடவை சின்னான் தாய் சினங்கொண்டு, 'உனக்கு எத்தனை தடவை சொன்னாலும் அறிவு வரமாட்டேன் என்கிறதே! சொன்னதைச் செய்ய மட்டுந்தான் உனக்குத் தெரியுமா? எதை எதை எப்படிச் செய்யவேண்டும் என்று தெரிய வேண்டாமா?' என்றாள்.

———

# ௩. சிறுஞமலி

மிக மிகப் பழமையான காலங்களில் உலகில் மனிதர்கள் மிகக் குறைவு. எங்கும் ஒரே காடா யிருந்தது. காட்டில் குறளிகள் பல இருந்தன.

காட்டின் நடுவில் ஒரு சிறு கிழவனும் சிறு கிழவியும் இருந்தனர். அவர்கள் வீடு ஒரு சிறு குடிசை. அது ஈர்க் கோல்களால் இயற் றப்பட்டிருந்தது.



அச் சிறு குடிசை யில் 'சிறுஞமலி' என்ற ஒரு நாய் இருந்தது. வீட் டிற்கு யார் வந்தா லும் அது குரைக்கும்.

வீட்டைச் சுற்றிப் புல் பச்சைப் பசேல் என்று செழித்து மெத்தென வளர்ந்திருந்தது.

ஒரு நாள் குறளிகள், அடர்ந்த காட்டிலிருந்து வெளி வந்தன. அவை மெத்தென்ற புல்மேற் பெரு விரல் ஊன்றி ஓசைபடாமல் அடியெடுத்து வைத்து நடந்து கிழவன் வீட்டிற்கு வந்தன. வந்து,

'ஈர்க் கோல்களைப் பிய்த்தெறி
அந்தச் சிறு கிழவனைப் பிடித்துத் தின்போம்
அந்தச் சிறு கிழவியைப் பிடித்துக்கொள்வோம்,'

என்று அவை கத்தின.

கிழவனும் கிழவியும் உறங்கிக்கொண் டிருந்தனர். ஆனல், சிறுஞமலி மட்டும் விழித்துக்கொண் டிருந்தது.

குறளிகள் வருவதை அது மோப்பத்தால் அறிந்தது. குறளிகள் பேச்சை அது தன் செவிகளை நிமிர்த்துக் கேட்டது. உடனே குரைக்கத் தொடங்கிற்று.



சிறு நாய் குரைப்பதைக் கேட்டுக் குறளிகள் ஒன்றை ஒன்று மோதிக் கொண்டு உருண்டோடின.

கிழவன் சிறுஞமலியின் குரல் கேட்டு விழித்தெழுந்தான். குறளிகள் வந்ததும், அவை சிறுஞமலியின் குரைப்புக் கேட்டு ஓடியதும் அவனுக்குத் தெரியவில்லை.

'இந்தச் சிறுஞமலி குரைத்துக் குரைத்து உறக்கத்தைக் கெடுக்கின்றது. இதற்கு நல்ல பாடம்

படிப்பிக்க வேண்டும். எல்லாம் பொழுது விடியட்டும். இதன் வாலை ஒட்ட அறுத்துவிடுகிறேன்,' என்று சினந்து கூறினான் கிழவன்.

விடிந்ததும் சிறுஞமலியின் வால் அறுக்கப்பட்டது.

மறுநாள் இரவும், குறளிகள், அந்த அடர்ந்த காட்டிலிருந்து வெளிவந்தன. அவை மெத்தென்ற புல்மேல் பெரு விரல் ஊன்றி ஓசை படாமல் அடியெடுத்து வைத்து நடந்து கிழவன் வீட்டுக்கு வந்தன.

'ஈர்க் கோல்களைப் பிய்த்தெறி
அந்தச் சிறு கிழவனைப் பிடித்துத் தின்போம்
அந்தச் சிறு கிழவியைப் பிடித்துக் கொள்வோம்,'

என்று அவை கத்தின.

கிழவனும் கிழவியும் முன்போல் ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தனர். ஆனால், சிறுஞமலி மட்டும் விழித்துக்கொண்டிருந்தது.

குறளிகள் வருவதை அது மோப்பத்தால் அறிந்தது. குறளிகள் பேச்சை அது செவிகளை நிமிர்த்துக் கேட்டது. கேட்டதும், அது குரைக்கத் தொடங்கிற்று.

சிறு ஞமலி குரைப்பதைக் கேட்டுக் குறளிகள் ஒன்றை ஒன்று முட்டி மோதிக்கொண்டு உருண்டோடின.

கிழவன் சிறுஞமலியின் குரல் கேட்டு மீண்டும் விழித்தெழுந்தான். குறளிகள் வந்ததும், சிறுஞமலி யின் குரைப்புக் கேட்டு அவை ஓடியதும் அவ னுக்குத் தெரியவில்லை.

"இந்தச் சிறுஞமலி இப்படியே குரைத்துக் குரைத்துத் துயிலைக் கெடுக்கின்றது. இதற்கு நல்ல பாடம் கற்பிக்க வேண்டும். எல்லாம் விடியட்டும். இதன் வாலை வெட்டியது போதாது. கால்களையும் துணித்துவிடுகிறேன்," என்று சினங்கொண்டான் கிழவன்.

விடிந்ததும் சிறுஞமலியின் கால்களும் துணிக்கப் பட்டன.

அடுத்தநா ளிரவும், குறளிகள் அந்த அடர்ந்த காட்டிலிருந்து வெளிவந்தன. மெத்தென்ற புல் மேல் பெருவிரல் ஊன்றி ஓசைபடாமல் அடியெடுத்து வைத்து நடந்து கிழவன் வீட்டுக்கு வந்தன. வந்ததும்,

'ஈர்க் கோல்களைப் பிய்த்தெறி
அந்தச் சிறு கிழவனைப் பிடித்துத் தின்போம்
அந்தச் சிறு கிழவியைப் பிடித்துக் கொள்வோம்,'

என்று அவை கத்தின.

கிழவனும் கிழவியும் பின்னும் பேருறக்கத்தில் ஆழ்ந்து கிடந்தனர். ஆனல், சிறுஞமலி மட்டும் விழித்துக்கொண்டிருந்தது.

குறளிகள் வருவதை அது மோப்பத்தால் அறிந்தது. குறளிகள் பேச்சை அது செவிகளை நிமிர்த்துக் கேட்டது. உடனே அது உரக்கக் குரைக்கத் தொடங்கிற்று. சிறுஞமலி குரைப்பதைக் கேட்டுக் குறளிகள் ஒன்றை ஒன்று முட்டி மோதிக்கொண்டு உருண்டோடின.

கிழவன் சிறுஞமலியின் உரத்த குரல் கேட்டு மீண்டும் விழித்தெழுந்தான். குறளிகள் வந்ததும் அவை சிறுஞமலியின் குரைப்புக் கேட்டு ஓடியதும் அவனுக்குத் தெரியவில்லை.

“இந்தச் சிறுஞமலி மீண்டுமா குரைத்துக் குரைத்து உறக்கத்தைக் கெடுக்கின்றது! இதற்கு இன்னும் நல்ல பாடம் கற்பிக்கவேண்டும்; விடியட்டும்; இதன் வாலையும், கால்களையும் வெட்டியது போதாது, தலையையும் வெட்டிவிடுகிறேன்,” என்று மிகச் சினந்துகொண்டான் கிழவன்.

விடிந்ததும் ஐயோ! சிறுஞமலியின் தலையும் வெட்டப்பட்டது.

அதற்கு அடுத்தநா ளிரவும் குறளிகள் அந்த அடர்ந்த காட்டிலிருந்து வெளிவந்தன. மெத்தென்ற புல்மேல் பெருவிரல் ஊன்றி ஓசை படாமல் அடியெடுத்து வைத்து நடந்து கிழவன் வீட்டுக்கு வந்தன. வழக்கம் போல,

'ஈர்க் கோல்களைப் பிய்த்தெறி
அந்தச் சிறு கிழவனைப் பிடித்துத் தின்போம்
அந்தச் சிறு கிழவியைப் பிடித்துக் கொள்வோம்,'

என்று அவை கத்தின.

கிழவனும் கிழவியும், அன்று சிறுஞமலியின் நிலையை நினைத்து, வருத்தத்தால் அவ்வளவாகத் துயில் கொள்ளவில்லை.

சிறுஞமலி அன்று குரைக்கவில்லை. விழித்திருக்க அதற்குக் கண்களும், மோப்பம் பிடிக்க மூக்கும், ஓசை கேட்கக் காதும், குரைக்க வாயும் அன்று அதற்கு இல்லாமற் போயின.



குறளிகள் திமுதிமென உள்ளே புகுந்தன. கிழவன் ஓசையைக் கேட்டான். உடனே தனது மெத்தையின் கீழே பதுங்கி ஒளித்துக்கொண்டான்.

குறளிகள் கிழவனைக் காணமல் கிழவியை மட்டும் பிடித்துக்கொண்டு போயின. தங்கள் குகைக்குப் போனபின் அவளை ஒரு பையிலே போட்டு வைத்துக்கொண்டன.

கிழவனுக்கு இப்போது உண்மை தெரிந்தது. "இந்தக் குறளிகள் ஒவ்வோர் இரவும் இப்படி வந்திருக்கவேண்டும். என் சிறுஞமலி அதனாலே தான் குரைத்திருக்கவேண்டும். சிறுஞமலியின் குரைப்புக்கேட்டு அவை ஓடியிருக்கவேண்டும்.

"என் சிறுஞமலியின் வாலை நான் அறுத்தது தவறு;

"என் சிறுஞமலியின் கால்களை நான் துண்டித்தது தவறு;

"என் சிறுஞமலியின் தலையை நான் வெட்டியது தவறு,"

என்று அவன் வருத்தத்தோடு நினைத்தான்.

உடனே சிறுஞமலியின் தலையையும், கால்களையும், வாலையும் கொண்டு வந்து அவன் அதனிடம் சேர்த்தான்.

சிறுஞமலி களிப்புடன் வாலைக் குழைத்தது; ஓடி வந்தது; தலையை ஆட்டி நன்றியுடன் வணக்கம் செய்தது.

கிழவன் சிறுஞமலிக்குக் கிழவியின் வெறும் படுக்கையைக் காட்டினான்.

சிறுஞமலி அவன் குறிப்பறிந்து, குறளிகள் போன வழியை மோப்பத்தால் அறிந்து அவற்றின் குகைக்கு ஓடியது.

அது பகல் நேரமானதால் குறளிகள் உறங்கிக் கொண்டிருந்தன. கிழவி பைக்குள் இருந்து அழுது கொண்டிருந்தாள். சிறுஞமலி துள்ளிக் குதித்துப் பற்களால் பையைத் தொளை செய்தது. கிழவி தொளை வழியாக வெளியே வந்து தன் இல்லம் சேர்ந்தாள்.



சிறுஞமலி குரைக்காமல் பையினுள் இருந்தது. விளக்கு வைத்ததும் குறளிகள் எழுந்தன. சில பல் விளக்கவும், சில குளிக்கவும் சென்றன. எல்லாம் வந்த பின் கிழவியைத் தின்னவேண்டும் என்று நினைத்தன. பையை எல்லாக் குறளிகளும் சேர்ந்து தூக்கிக்கொண்டு வந்து அறை நடுவில் வைத்துக் கிழவியை எடுக்கக் கைகளை விட்டன.

சள்ளென்று சிறுஞமலி குரைத்துக்கொண்டு வெளிப்பட்டது. குறளிகளுக்குக் குலைநடுக்கமுண்டாயிற்று. அவை ஒன்றை ஒன்று முட்டி மோதிக் கொண்டு உருண்டோடின. ஆனல் சிறுஞமலி அவற்றை ஒன்றையும் விடாமல் பிடித்துப் பிடித்துத் தின்றுவிட்டது.

கிழவனுக்கும் கிழவிக்கும் அதுமுதல் குறளி களைப்பற்றிக் கவலையே இல்லை.

## அருஞ் சொற்கள்

| | | | |
|---|---|---|---|
| அடர்ந்த | கவலை | குறைவு | பழமை |
| அறுத்து | குடிசை | செழித்து | பிடித்து |
| ஈர்க்கோல் | குரைக்கும் | திமு திமு | பெருவிரல் |
| உரத்த குரல் | குலை நடுக்கம் | துணித்து | முட்டி மோதி |
| உறங்கி | குளிக்க | துயில் | மோப்பம் |
| ஒளித்து | குறளி | திமிர்த்து | விடியட்டும் |
| ஓசைபடாமல் | குறிப்பறிந்து | பல் விளக்க | விழித்து |

---

## ௪. பேராசை பெருங்கேடு

பேரா சையினுல் நாயொன்று
பெரிதும் இரையைத் தேடிநொந்து
ஊரில் திரிந்து திருடியதோர்
அப்பத் துண்டை வாய்கௌவி
செல்லும் வழியில் ஓர் மடுவைச்
சென்று கடக்கப் போட்டதொரு



நல்ல பாலம் வழியாக
நடந்து சென்ற நாய்நீரில்
எட்டிப் பார்த்துத் தன்நிழலே
இருக்கக் கண்டே அதன்வாயில்

அப்பமும் இருக்கக் கண்டதனை
எட்டிப் பிடிப்பேன் எனஎண்ணி
எழுந்து நீரில் பாய்ந்ததுவே
இருந்த அப்பமும் வீழ்ந்ததுவே
அழுந்திச் சேற்றில் பாய்ந்ததுவே
ஆசை முழுதும் தீர்ந்ததுவே.

### அருஞ் சொற்கள்

| | | |
|---|---|---|
| அழுந்தி | திருடி | பேராசை |
| இரை | தீர்ந்தது | மடு |
| கட்க்க | நொந்து | மாய்ந்தது |
| கௌவி | பாய்ந்தது | முழுதும் |
| சேறு | பெருங்கேடு | வீழ்ந்தது |

---

## ரு. தேனீப் பட்டாளம்

முன்காலத்தில் பெரிய நகரங்களைச் சுற்றிலும் கருங்கல்லினால் மதில் சுவர்கள் கட்டப்பட்டிருந்தன. பகைவர்கள் வராமல் இருப்பதற்காகவே இப்படிக் கோட்டைகள் கட்டப்பட்டன.

அக் காலத்தில் விசயநகரத்தைச் சுற்றிலும் மிகப் பெரிய கோட்டைச் சுவர் இருந்தது. நகரின் உள்ளே வருவதற்கு ஒரே ஒரு வாசல் இருந்தது. அந்த வாசலுக்கு இரும்பினால் ஆகிய பெரிய கதவுகள் இருந்தன. அங்கே ஒரு காவல்காரன் இருந்தான். அவனுக்குக் கதவை மூடுவதும் திறப்பதுவுந் தான் வேலை. அதனால் அவன் அங்கேயே குடியிருந்தான். அவன் காவலுக்குக் கெட்டிக்காரன். அயலார் ஒருவரையும் அவன் உள்ளே விடமாட்டான்.

கதவுகளை அடிக்கடி திறக்கும் வேலை கிடையாது. சில நாட்களில் கதவுகளைத் திறப்பதே இல்லை. இதனால் அவனுக்கு நல்ல ஒய்வு உண்டு. அவன் தேனீ வளர்ப்பதில் விருப்பமுடையவன்.

"தேன் கூடுகளை மதில் சுவரின்மேல் வைத்தால் என்ன? அங்கே வைத்துவிட்டால் அவற்றை யாரும் தொடமாட்டார்கள்," என்று எண்ணினான். அதன் படியே தேன் கூடுகளைச் சுவரின்மேல் வரிசை வரிசையாக அடுக்கி வைத்தான்.

விசய நகரத்தைப் பிடிக்கவேண்டு மென்னும் எண்ணம் முகலாய மன்னனுக்கு நெடுநாட்களாய் இருந்துவந்தது. எப்பொழுது நேரம் வாய்க்கும் என்று அவன் எதிர்பார்த்திருந்தான். அவன் தன் அமைச்சர்களுடன் கலந்து போருக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தான். "நாம் பொழுது விடிவதற்குள் விசய நகரத்தை முற்றுகையிட்டால், அவ் ஊரிலுள்ளவர்கள் விழித்துக்கொள்வதற்குள் நகரத்தைப் பிடித்துக்கொள்ளலாம்," என்று முதல் அமைச்சன் சொன்னான்.

ஒருநாள் நல்ல இரவில் முகலாய மன்னன் ஒரு பெரிய படையைத் திரட்டிக்கொண்டு விசய நகரத்தை நோக்கிப் புறப்பட்டான். விசயநகரம் நன்றாய் உறங்கிக்கொண்டு இருந்தது. பால்காரர்களே விடியற்காலையில் எழுந்து வேலை செய்கிறவர்கள்.

பால் விற்கும் பையன்களில் சொக்கனும், முனியனும் இணைபிரியாத நண்பர்கள். அவர்கள் இருவரும் அன்று விடியற்காலையில் பால் விற்கப் போகும்போது கோட்டை வாசல்பக்கம் வந்து சேர்ந்தார்கள்.

"காவல்காரன் நன்றாய்க் குறட்டை போடுகிறான். கொஞ்சம் தேன் சாப்பிடலாமா?" என்று சொக்கன் கேட்டான். முனியன் அதற்கு இசைந்தான். இருவரும் மெள்ள மெள்ளச் சுவரின்மேல் ஏறினார்கள். சொக்கன் மேலே ஏறியதும் "அது

என்ன ஓசை?'' என்று கேட்டான். "ஒருவேளை காவல்காரன் விழித்துக் கொண்டிருப்பானோ?'' என்று முனியன் சொக்கன் காதிற்குள் மெல்லச் சொன்னான்.

"இல்லை இல்லை. அந்த ஓசை, சுவருக்கு வெளிப் புறத்திலிருந்து வருகிறது, என்று சொக்கன் சொன்னான். இரண்டு பையன்களும் சுவரின் ஓரத்தில் போய் எட்டிப் பார்த்தார்கள். முகலாய சேனை



நிற்பதைக் கண்டார்கள். சுவரின்மேல் ஒரு பெரிய ஏணி சாய்த்து வைத்திருந்தது. இன்னும் சற்று நேரத்தில் அவர்கள் சுவரின்மேல் ஏறி உள்ளே வந்து விடுவார்கள்போல் தோன்றியது.

சிறுவர்களுக்கு என்ன செய்வதென்று தோன்றவில்லை. தங்கள் ஊரிலுள்ளவர்களை எழுப்பவோ

எச்சரிக்கை செய்யவோ நேரமில்லை. இரண்டு சிறு பையன்கள் பெரிய சேனையை எதிர்த்து என்ன செய்யமுடியும்?

சொக்கனுக்குத் தேன் கூடுகளின் நினைவு வந்தது. ஊரிலுள்ளவர்கள் விழிக்காவிட்டாலும் தேனீக்கள் மட்டும் விழித்துக்கொண்டுதான் இருந்



தன. இருவரும் சேர்ந்து தேன்கூடுகளைச் சுவரின் ஓரத்திற்குக் கொண்டுபோனார்கள். மறு நொடியே தேன்கூடுகள் கீழே நின்றவர்களின் தலைமேல் விழுந்தன.

தேனீக்கள் 'விர்' என்னும் ஒலியுடன் சண்டையிடத் தொடங்கின. அடே அப்பா! என்ன கூக்குரல்! என்ன ஓட்டம்! தேனீக்கள் கொட்டுவது தேள் கொட்டுவதைப் போல் இருந்தது.

இரண்டு பையன்களும் கீழே இறங்கி மணி அடித்தார்கள். ஊரரெல்லாரும் எழுந்து ஓடி வந்தனர். விசய நகர மன்னன் தன் படையைத் திரட்டிக் கொண்டு கோட்டை வாசலை நோக்கி ஓடி வந்தான். இதற்குள் தேனீக்கள் தங்கள் வேலையைச் செய்து முடித்துவிட்டன. தேனீப் படைகள் முன்னுல் முகலாயப் படை எதிர்த்து நிற்க முடியவில்லை. முகலாய சேனை வந்தவழியே ஓட்டம் பிடித்தது.

விசயநகர மன்னன் சொக்கனுக்கும் முனியனுக்கும் நல்ல பரிசுகள் கொடுத்தான். பின்பு அவர்களைத் தன் அரண்மனையிலேயே வேலைக்கு அமர்த்திக்கொண்டான்.

'நாட்டினைக் காத்த சிறுவர்களின்
நற்றமிழ்க் கதையைக் கற்றனமே.'

### அருஞ் சொற்கள்

| | | |
|---|---|---|
| அரண்மனை | ஓட்டம் பிடித்தல் | மதில் சுவர் |
| இணை பிரியாத | ஒய்வு | முகலாய மன்னன் |
| எச்சரிக்கை | குறட்டை | முற்றுகை யிடுதல் |
| எதிர்த்துநிற்க | நெடுநாட்கள் | விடியற்காலை |



## ௯. கண்ணாடிச் செருப்பு

I

நெடுங்காலத்திற்கு முன் அல்லி என்னும் அழகிய பெண் ஒருத்தி இருந்தாள். அவளுடைய



தாய் இறந்துவிட்டதால் சமையல் வேலையெல்லாம் அவளே பார்த்துவந்தாள்.

அவளுக்குத் தமக்கைகள் இருவர் இருந்தனர். அவர்கள் அல்லியை மிகவும் கொடுமைப்படுத்தி வந்தனர். வீட்டு வேலை முழுவதும் அல்லியையே செய்யச் சொன்னார்கள். அல்லிக்கு நல்ல துணி கூடக் கிடையாது.

ஒருநாள் அல்லியின் தமக்கைகள் இருவரும் ஆட்டம் போட்டுக்கொண்டு வீட்டிற்கு வந்தார்கள்.

"எங்களை இளவரசர் விருந்துக்கு அழைத்திருக் கிறார்," என்று அவளிடம் சொன்னார்கள். விருந் துக்கு ஏற்படுத்திய நாள் வந்தது. இருவரும் நல்ல பட்டு ஆடைகளை உடுத்திக்கொண்டு அரண்மனைக் குப் போனார்கள். அல்லியை வீட்டிலேயே நிறுத்தி விட்டுப் போய்விட்டார்கள். அல்லி தன் கிழிந்த பாவாடையைப் பார்த்துக் கண்ணீர் விட்டாள்.

"நான் மட்டும் என்ன பாவம் செய்தேன்! அவர் கள் பட்டாடை உடுத்தும்போது நான் கந்தலைக் கட்டிக்கொண்டு இருக்கிறேனே!" என்று அழுதாள். இப்படிச் சொல்லி வாய்மூடுவதற்குள் அவள் முன் ஓர் அழகிய தேவதை தோன்றிற்று. அதன் கையில் ஒரு மந்திரக்கோல் இருந்தது.

"குழந்தாய்! நான் உனக்கு உதவி செய்ய வந்திருக்கிறேன் ; நீயும் இளவரசருடைய விருந்துக் குப் போகலாம்; நீ முதலில் தோட்டத்திற்குப் போய் ஒரு பெரிய பூசணிக்காய் கொண்டுவா!" என்று தேவதை சொல்லிற்று. அல்லி அப்படியே கொண்டு வந்தாள். தேவதை மந்திரக்கோலினால் பூசணிக் காயைத் தட்டியது. கண்ணை மூடித் திறப்பதற்குள் அந்தப் பூசணிக்காய் ஒரு தங்கநிறமான வண்டியாக மாறிவிட்டது.

அல்லியின் வீட்டில் ஓர் எலி வளை இருந்தது. அதில் இரண்டு பெரிய எலிகளும் இரண்டு சிறிய எலிகளும் இருந்தன. தேவதை தன் மந்திரக்

கோலின் உதவியினால் இரண்டு பெரிய எலிகளையும் இரண்டு வெள்ளைக் குதிரைகளாக மாற்றிவிட்டது. இரண்டு சிறிய எலிகளும் வண்டிக்காரனாகவும் வேலைக்காரனாகவும் மாறிவிட்டன.

"நான் இந்தக் கந்தல் துணியைக் கட்டிக் கொண்டு எப்படி அரண்மனைக்குப்போவது?" என்று அல்லி கேட்டாள். "அப்படியா, சரி சரி!" என்று சொல்லிக்கொண்டே தேவதை மந்திரக்கோலை அல்லியின் தலைமேல் தடவிற்று. கந்தல் துணி சிவந்த நிறமுள்ள உயர்ந்த பட்டு உடையாக ஆய் விட்டது. அல்லி காலில் போட்டிருந்த கிழிந்த பழைய செருப்பு அழகிய கண்ணாடிச் செருப்பாக மாறியது.

"நான் சொல்வதை நன்றாய்க் கேள்! நீ பன் னிரண்டு மணி அடிப்பதற்குள் அரண்மனையிலிருந்து வெளியில் வந்துவிடவேண்டும். அந்த நேரம் வந்த வுடன் உன் வண்டி பூசணிக்காயாக மாறிவிடும். உன் குதிரைகளும் வேலைக்காரர்களும் எலிகளாய் மாறிப்போவார்கள். நீயும் பழைய அல்லியாக ஆய் விடுவாய்!" என்று தேவதை எச்சரிக்கை செய்தது. அல்லி பன்னிரண்டு மணிக்குள் வந்து விடுவதாக வாக்களித்துவிட்டு, அரண்மனைக்குப் போனாள்.

II

அரண்மனையில் இளவரசர் அல்லியைப் பார்த் தார். அவளுடைய அழகைக் கண்டு அவர் மயங்கிப்

போய்விட்டார். அவர் அல்லியையே திருமணம் செய்துகொள்வதென்று உறுதி செய்துகொண்டார். அன்று இரவு அல்லி இளவரசருடன் பேசிக் கொண்டும் விளையாடிக்கொண்டும் இருந்தாள். நேரம் போவதுகூட அவளுக்குத் தெரியவில்லை.

மணி பன்னிரண்டு அடித்துக்கொண்டு இருந்தது. ஒன்று, இரண்டு, மூன்று...! அல்லி ஓட்டம் பிடித்தாள். அரண்மனை வாசற்படியில் இறங்கி



ஓடும்போது அவளுடைய கண்ணாடிச் செருப்பு ஒன்று அங்கே விழுந்துவிட்டது. மணி அடிப்பதும் நின்றது. அவள் தன் வண்டியின் பக்கத்தில் வந்து சேர்ந்தாள். அதற்குள் வண்டி பூசணிக்காயாகமாறி விட்டது. பாவம்; என்ன செய்வாள்! குதிரைகளும் வேலையாட்களும் எலிகளாய் மாறிவிட்டனர்! அல்லி தன் கந்தல் துணியுடன் வீட்டிற்கு நடந்து சென்றாள்.

அரண்மனை வாசற்படியில் கிடந்த கண்ணாடிச் செருப்பை இளவரசர் கண்டார். தான் காதல் கொண்ட பெண்ணின் செருப்பு என்பது அவருக்குத் தெரியும். உடனே அவர் தன் காதலியைத் தேடிப் புறப்பட்டார். எத்தனையோ பெண்கள் அந்தக் கண்ணாடிச் செருப்பைப் போட்டுப் பார்த்தார்கள். ஒருவருக்கும் அது சரியாக இல்லை.



முடிவில் இளவரசர் அல்லியின் வீட்டிற்கு வந்து சேர்ந்தார். அல்லியின் தமக்கைமார் இருவரும் கண்ணாடிச் செருப்பைப் போட்டுப் பார்த்தார்கள். அவர்களுடைய கால்கள் அதில் நுழையவில்லை. இளவரசர் காத்துக்கொண்டு இருந்தார். அல்லி தன் வேலைகளையெல்லாம் செய்து முடித்துவிட்டு அங்கே வந்தாள்.

"நான் இதைப் போட்டுப் பார்க்கலாமா?" என்று அல்லி கேட்டாள். "இதைப் போட்டுக்

கொண்டு நடக்க உனக்கு என்னடி தெரியும்?" என்று தமக்கை ஒருத்தி சொன்னுள். "இதை எந்தக் காலில் போடுவது என்று உனக்குத் தெரியுமா?" என்று மற்றொருத்தி கேட்டாள்.

"எதற்கும் அவள் போட்டுப் பார்க்கட்டுமே," என்று இளவரசர் சொன்னுர். அல்லி கண்ணுடிச் செருப்பைக் காலில் போட்டாள். அவளுக்கு அளவெடுத்துச் செய்ததுபோல் அது சரியாக இருந்தது. அல்லி எழுந்து நின்ருள். அவளுடைய கந்தல் துணி நல்ல பட்டுப் புடவையாக மாறிவிட்டது. அவளுடைய இரண்டு கால்களிலும் அழகிய இரண்டு கண்ணுடிச் செருப்புகள் தோன்றின.

அரண்மனையில் தான் கண்டு காதல் கொண்ட பெண் அல்லியே என்பதை இளவரசர் உணர்ந்தார். உடனே திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். அல்லி இளவரசருடன் இன்பமாய் வாழ்ந்துவந்தாள்.

---

## எ. வால் அறுந்த கரடி

முன் ஒரு காலத்தில் இமயமலைச் சாரலில் பனி மிகவும் கடுமையாக இருந்தது. அங்கே சில செம்படவர்கள் மீன் பிடித்துக் கூடையில் வைத்திருந்தார்கள். ஒரு குள்ளநரி சில மீன்களைத் திருடிக்கொண்டு ஓடிற்று. அதன் எதிரில் ஒரு கரடி வந்தது.

"ஐயா நரியாரே! உமக்கு இன்று நல்ல வேட்டைபோல் இருக்கிறதே! இவ்வளவு நல்ல மீன் எங்கே கிடைத்தது?" என்று கரடி கேட்டது.



"ஓர் இடத்தில் அருமையான மீன் இருக்கிறது. இன்றிரவு என்னோடு வந்தால், அவைகளை எப்படிப் பிடிப்பது என்பதை உமக்குக் காட்டுகிறேன்," என்று குள்ளநரி சொல்லிற்று.

"அப்படியே ஆகட்டும்; என்னுடைய தூண்டிலும் முள்ளும் எடுத்துக்கொண்டு வரட்டுமா?" என்று கரடி கேட்டது.

"தூண்டில் முள் வேண்டியதில்லை; நான் எப்போதும் என் வாலினுலேதான் மீன் பிடிப்பது வழக்கம்; உமக்கு நீளமான வால் இருப்பதால், நீர் என்னை விட நன்ருய் மீன் பிடிக்கலாம்," என்று நரி சொல்லிற்று.

இரவு வந்ததும் குள்ளநரி கரடியை இமயமலையின் அடிவாரத்திற்கு அழைத்துச் சென்றது. அங்கே ஒரு சிறிய ஓடை இருந்தது. அதில் தண்ணீர் பனிக்கட்டியாக இறுகிப்போய் இருந்தது. பனிக்கட்டியில் ஓரிடத்தில் கொஞ்சம் பிளவு இருந்தது.

"இங்கே உட்கார்ந்து உமது வாலைப் பனிக்கட்டியின் சந்தில் நுழைத்துவைக்கவேண்டும். நீண்ட நேரம் வைத்திருந்தால், மீன்கள் வந்து உமது வாலைப் பிடித்துக்கொள்ளும். பிறகு ஒரே மூச்சில் வாலைப் பிடுங்கி வெளியில் எடுக்கவேண்டும்," என்று குள்ளநரி சூழ்ச்சியாகச் சொல்லிற்று.

கரடி இதைநம்பிக்கொண்டு,குள்ளநரிசொல்லியபடியே செய்தது. நெடுநேரம் வரையில் அசையாமல் உட்கார்ந்திருந்தது. அதனுல், குளிர் தாங்க முடியவில்லை. மெள்ள உடலை அசைத்துப் பார்த்தது.

"ஐயோ! என் வால் பனிக்கட்டியில் ஒட்டிக் கொண்டதே! மீன்களை வெளியில் இழுக்கட்டுமா?" என்று கரடி குள்ளநரியைக் கேட்டது. அதன் வால் பனிக்கட்டியுடன் அப்படியே உறைந்துபோய் இருந்தது.

"இதற்குள் எடுத்துவிடக்கூடாது. இன்னும் கொஞ்சம் மீன்கள் சேரும்வரையில் பொறுமையுடன் இருக்கவேண்டும். நீர் நல்ல வலிமை யுடையவர் தாமே! இன்னும் கொஞ்சநேரம் பொறுத்துக் கொள்ளக்கூடாதா?" என்று நரி சொல்லிற்று.



கரடியும் விடியற்காலைவரையில் பொறுமை யுடன் காத்திருந்தது. ஆற்றங்கரையில் நாய்கள் குலைக்கும் ஓசை கேட்டது. கரடி துள்ளிக் குதித்தது. தன்னால் ஆனமட்டும் வாலை இழுத்துப் பார்த்தது.

அது வெளியில் வரவில்லை. பனிக்கட்டியில் நன்ருய் ஒட்டிக்கொண்டு இருந்தது.

மறுபடியும் மூச்சுப் பிடித்துக்கொண்டு ஒரே இழுப்பாக இழுத்தது. அதன் வால் 'படீர்' என்று அறுந்துபோயிற்று. குள்ளநரிக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. அது சிரித்துக்கொண்டே ஓடிப்போய் விட்டது. பெரிய கரடிக்கு வால் போனதிலிருந்து அதற்குத் தோன்றிய குட்டிகளுக்கெல்லாம் வால் குட்டையாகவே ஆய்விட்டது.

"தந்திர நரியுரை கேட்டதனுல்
தன்வால் இழந்தது கரடியுமே!"

### கூ, எ - ம் கதைகளின்

### அருஞ் சொற்கள்

| | | |
|---|---|---|
| அறுந்தது | சிரிப்பு | பனிக்கட்டி |
| ஆற்றங்கரை | சூழ்ச்சி | பிடுங்கி |
| இமயமலைச்சாரல் | செம்படவர் | பூசணிக்காய் |
| இழந்தது | தமக்கை | மந்திரக்கோல் |
| இளவரசர் | திருமணம் | மூச்சுப்பிடித்தல் |
| எலிவளை | தூண்டில் | வனதேவதை |
| சமையல் | நெடுநேரம் | வாசற்படி |

# அ. சித்திரக் குள்ளன்

I

முன்னொரு காலத்தில் ஒரு நல்ல தமிழ்ப் புலவர் இருந்தார். அவருக்கு வனதேவதைகள் இருக்கும் இடம் எல்லாம் நன்ருய்த் தெரியும். ஒருநாள் அவர் காட்டின் வழியாகப் போய்க்கொண்டு இருக்கும் போது இரவு வந்துவிட்டது. பக்கத்தில் ஒரு சிறிய குடிசையைக் கண்டு அதன் கதவைத் தட்டினர். அவர் முகம் பசியினல் வாடி இருந்தது. அந்த வீட்டிலிருந்த குடியானவனும் அவன் மனைவியும் அவரைப் பார்த்து இரக்கப்பட்டார்கள். உடனே அவருக்குச் சாப்பாடு போட்டு அங்கே தங்குவதற்கு இடமும் கொடுத்தார்கள்.

அந்தக் குடியானவனுக்கு ஒரு குறைவும் இல்லை. அப்படி இருந்தும் அவனும், அவன் மனைவியும் மிகவும் வாட்டமாக இருந்தனர்.

"நீங்கள் ஏன் வருத்தமாய் இருக்கிறீர்கள்? உங்களுக்கு நல்ல தோட்டமும் அழகிய வீடும் இருக்கின்றனவே! வேறு என்ன வேண்டும்?" என்று அவர்களிடம் அந்தப் புலவர் கேட்டார்.

"எங்களுக்கு நீண்ட நாட்களாகக் குழந்தை இல்லை. அதுதான் பெரிய கவலையாக இருக்கிறது," என்று குடியானவன் மனைவி சொன்னள். "எங்க

ளுக்கு ஒரு விரல் அளவு சிறிய பையன் இருந்தாலும் போதும். அவனை நாங்கள் அன்போடு வளர்த்து வருவோம்,'' என்று அவள் சொன்னாள்.

"ஒரு விரல் உயரத்தில் பிள்ளை கிடைத்தால் அது வேடிக்கையாகத்தான் இருக்கும். கடவுள் உங்களுக்கு அப்படியே அருள் புரிவார்,'' என்று புலவர் சொன்னார்.

மறுநாள் காலையில் புலவர் வனதேவதையின் அரண்மனைக்குப் போய்க் குடியானவனுடைய மனைவியின் ஆவலைத் தெரிவித்தார். வனதேவதை, "அப்படியே ஆகட்டும். அவளுக்குப் பெருவிரல் அளவு உயரத்தில் ஒரு மகன் பிறப்பான்,'' என்று வரம் கொடுத்தது.

II

வனதேவதை கொடுத்த வரத்தின்படியே குடியானவன் மனைவிக்கு ஓர் ஆண்குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தை பெருவிரலின் அளவுதான் இருந்தது. இந்த வியப்பைக் காண ஊரிலுள்ளவர்களெல்லாரும் கூட்டம் கூட்டமாய் வந்தார்கள். வனதேவதையும் குழந்தையைப் பார்க்க வந்தது. அது பையனை எடுத்து முத்தமிட்டு அவனுக்குச் '**சித்திரக் குள்ளன்**' என்னும் பெயர் சூட்டியது.

சிலந்திக் கூட்டிலிருந்து பட்டு எடுத்துவந்து வனதேவதை அவனுக்குச் சட்டை தைத்துக் கொடுத்தது. இலையினாலும் பூவினாலும் அவனுக்குத்

தொப்பி செய்து கொடுத்தது. எலித் தோலினுல் செருப்புத் தைத்துக் கொடுத்தது. இன்னும் அவனுக்கு வேண்டிய பொருள்களெல்லாம் வனதேவதை கொண்டுவந்து கொடுத்தது.

குள்ளன் குள்ளனுகவே இருந்தான். பெருவிரலின் உயரத்திற்குமேல் அவன் வளரவில்லை. ஆனுல் அவன் பெரிய குறும்புக்காரனுக இருந்தான். ஒரு நாள் அவனுடைய தாய் பாயசம் செய்தாள். குள்ளன் பாயசம் வைத்திருந்த ஏனத்தை எட்டிப் பார்த்



தான். கால் நழுவி அதற்குள் விழுந்துவிட்டான். அவன் அப்படியே பாயாசத்திற்குள் முழுகிப் போய் விட்டான்.

அவன் அதன் உள்ளே விழுந்தது தாய்க்குத் தெரியாது. குள்ளன் உள்ளேயே காலை உதைத்துக் கொண்டு கிடந்தான். பாயசம் தானுகக் குதிப்பதைக்

கண்டு தாய் அஞ்சினாள். அவளுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. அதில் பேயோ பிசாசோ இருக்கவேண்டும் என்று நினைத்தாள். அதைக் கீழே கொட்டிவிடலாம் என்று தெருவிற்கு எடுத்துக் கொண்டு போனாள். வாசற்படியில் ஒரு பிச்சைக் காரன் நின்றான்.

"இதை வேண்டுமானால் நீ சாப்பிடு," என்று அதைப் பிச்சைக்காரனிடம் கொடுத்தாள். பிச்சைக் காரன் அவளுக்கு ஒரு கும்பிடு போட்டுவிட்டு அதை வாங்கிக்கொண்டான். அவன் அதைத் தன் கூடையில் வைத்துக்கொண்டு புறப்பட்டான். அடுத்த தெருவிற்குப் போனவுடன் குள்ளன் தன் தலையை மேலே தூக்கிக்கொண்டு கீச்சென்று கத்தினான். "என்னை வெளியே எடுத்து விடுகிறாயா? இல்லையா?" என்று கேட்டான்.

பிச்சைக்காரன் நடுநடுங்கிப் போய்விட்டான். அவன் பாயசத்தைக் கூடையோடு கீழே போட்டு விட்டுத் திரும்பிப் பாராமல் ஓட்டம் பிடித்தான். கூடைக்குள்ளிருந்த குள்ளன் மெள்ளமெள்ள வெளியில் வந்து, வீட்டை நோக்கி நடந்தான். அவனுடைய தாய் அவனைக் குளிக்கச் செய்து தூங்கவைத்தாள்.

III

குள்ளன் வீட்டில் ஒரு பசு இருந்தது. ஒருநாள் குள்ளன் வைக்கோல் போரில் விளையாடிக்கொண்டு இருந்தான். மாடு அவனை வைக்கோலுடன் சேர்த்து

வாயில் போட்டுக்கொண்டது. குள்ளன் உள்ளேயே துள்ளித் துள்ளிக் குதித்தான். மாடு வாயைத் திறந்தது. குள்ளன் கீழே பாய்ந்தான். அதற்குள் அவன் தாய் ஓடிவந்து அவனை வீட்டிற்கு எடுத்துக் கொண்டு போனாள். நல்ல வேளையாக அவனுக்கு அடிபடவில்லை.



ஒருநாள் குள்ளன் அவன் தந்தையுடன் தோட்டத்திற்குப் போனான். "அப்பா! நான் குதிரையை வீட்டிற்கு ஓட்டிக்கொண்டு போகட்டுமா?" என்று கேட்டான். "நீ குதிரைமேல் எப்படிச் சவாரி செய்வாய்?" என்று அவன் தந்தை கேட்க, "நான் அதன் காதிற்குள் உட்கார்ந்துகொண்டு அதற்குச் சொல்லிக்கொடுப்பேன்," என்று பையன் சொன்னான். தந்தை ஒத்துக்கொண்டபின், அவன் குதிரையின் காதுக்குள் உட்கார்ந்துகொண்டு வீடுநோக்கி வந்தான்.

குதிரை வீட்டிற்கு வந்து சேர்ந்தது. "அம்மா, அம்மா!" என்று குள்ளன் கூப்பிட்டான். தாய் வெளியில் வந்தாள். குள்ளன் இருக்கும் இடம் அவ ளுக்குத் தெரியவில்லை. "என் கண்ணே! நீ எங்கு ஒளிந்துகொண்டு இருக்கிறாய்?" என்று அவள் கேட்டாள். "நான் குதிரையின் காதுக்குள் இருக் கிறேன்; என்னைக் கீழே எடுத்து விடு," என்று குள் ளன் சொன்னான். தாய் அவனை எடுத்து முத்தமிட் டாள். அவனை வீட்டிற்குக் கொண்டுபோய்ப் பால் ஊட்டினாள்.

குள்ளன் ஒருநாள் விளையாடிக்கொண்டே போய்ச் சாக்கடையில் விழுந்துவிட்டான். அவனைக் கோழிக் குஞ்சு என்று நினைத்து ஒரு பருந்து தூக்



கிக்கொண்டு போய்விட்டது. அது கடலுக்குமேல் பறந்து போயிற்று. குள்ளன் துள்ளியதால் பருந்து

அவனைக் கடலில் போட்டுவிட்டது. அவன் தண்ணீருக்குள் போனதும் அங்கிருந்த ஒரு பெரிய மீன் அவனை அப்படியே விழுங்கிவிட்டது.

அந்த மீன் செம்படவர்களின் வலையில் அகப்பட்டது. செம்படவர்கள் அந்த மீனை அவ்வூர் அரசனுக்குக் கொடுத்துவிட்டார்கள். சமையற்காரன் மீனை அரிந்தவுடன் குள்ளன் அதன் வயிற்றிலிருந்து வெளியில் குதித்தான். அவனை அரசன் முன்னால் கொண்டுபோய் நிறுத்தினார்கள். குள்ளன் தன் கதையை அரசனிடம் சொன்னான்.

IV

அரசன் குள்ளனைத் தன் அரண்மனையிலேயே வைத்துக்கொண்டான். அரசன் எங்கே போனாலும் குள்ளனைத் தன் சட்டைப் பையில் போட்டுக்கொண்டு போவது வழக்கம். அரசன் குள்ளனுக்குப் புதிய சட்டைகள் தைத்துக் கொடுத்தான். அவன் சவாரி செய்வதற்கு ஓர் அழகான சீமை எலி வாங்கிக்கொடுத்தான். அவனுக்கு ஒருசிறியபட்டாக்கத்தியும் செய்து கொடுத்தான். குள்ளன் எலியின் மேல் சவாரி செய்வதையும், அவன் பட்டாக் கத்தியை வீசுவதையும் பார்த்து அரசனும் அரசியும் மகிழ்ச்சி அடைவார்கள்.

ஒரு நாள் குள்ளனுடைய எலிக்குதிரையை ஒரு பூனை பிடித்துக்கொண்டது. குள்ளன் தன் பட்டாக்கத்தியை உருவிக்கொண்டு அந்தப் பூனை

யுடன் சண்டையிட்டான். அப்படியிருந்தும் பூனை எலியைக் கொன்றுவிட்டது. அது குள்ளனையும் கடித்து நகத்தால் கீறிவிட்டது. அரசன் ஓடிவந்து குள்ளனைப் பூனையினிடமிருந்து காப்பாற்றினான்.

குள்ளன் சில நாட்கள் மட்டும் படுக்கையிலிருந்தான். அவன் நலம் அடைந்ததும் முன்போலவே அரசனுடைய உயிர்த் தோழனாகி ஆய்விட்டான். அரசன் குள்ளனுக்கு அமைச்சர் வேலை கொடுத்தான். குள்ளனுடைய நிலையை அறிந்து அவன் தாயும் தந்தையும் அடைந்த இன்பத்துக்கு அளவே கிடையாது.

'வேடிக்கைக் குள்ளன் கதைதனையே
விருப்புடன் கற்றே வியந்தனமே!"

அருஞ் சொற்கள்

| | | |
|---|---|---|
| சாக்கடை | பட்டாக்கத்தி | வாசற்படி |
| செம்படவர் | வனதேவதை | வாட்டமாக |

## ௯. பேகன்

பழையபழைய நாளிலே
பகரும்இந்த நாட்டையே
அரசர்பலரும் புகழவே
ஆண்டான்பேகன் என்பவன்.



கருணைசேரும் நெஞ்சமும்
கனிந்துநோக்கும் கண்களும்
உரிமையாகக் கொண்டவன்
உயரும்நல்ல பேகனே.

சோலையில் உலாவவே
சூழ்ந்துமன்னன் சென்றனன்
மாலைபெய்த மழையினால்
மனமகிழ்ந்த ஓர்மயில்

தோகையைப் பரப்பியே
தோன்றஆடும் காட்சியைப்
பேகன்கண்டு குளிரினால்
பெரிதுநடுக்கம் கொண்டதே

குளிரைப்போக்கும் கொள்கையே
குணம்எனத்தான் கொண்டனன்
களியுடன் தன் போர்வையால்
கனிந்துமயிலைப் போர்த்தனன்.

பேகனைப்போல் நாமுமே
பேணும்உள்ளக் கருணையால்
ஆகும்எல்லா உயிரையும்
அணைத்துக்காத்தல் கடமையே.

**அருஞ் சொற்கள்**

| | | |
|---|---|---|
| அணைத்து | கனிந்து | பகரும் |
| உரிமை | கொள்கை | பரப்பி |
| உலாவ | சூழ்ந்து | போர்வை |
| கருணை | நெஞ்சம் | மனமகிழ்ந்த |

# கo. கழுதையின் பாட்டு

I

ஒரு வண்ணனிடம் கழுதை ஒன்று இருந்தது. அதற்கு வயதாகிவிட்டதால் வேலை செய்ய முடியவில்லை. வண்ணன் அதை எப்படியாவது தொலைத்து விடவேண்டும் என்று எண்ணினன். இதைத் தெரிந்துகொண்ட கழுதை அவனிடமிருந்து தப்பி ஓடிவிட்டது.



அந்தக் கழுதைக்கு இசைபாடுவதில் மிகுந்த விருப்பம். அது போகும் வழியில் ஒரு கிழ நாயைச் சந்தித்தது. நாய் பெருமூச்சு விட்டுக்கொண்டு நின்றது, "ஏன் ஐயா இப்படி இளைத்துப்போய் இருக்

கிறீர்?'' என்று கழுதை கேட்டது. "எனக்கு வயதாகி விட்டது. என்னல் வேட்டைக்குப் போக முடிய வில்லை. அதனல் வேடன் என்னை அடித்துத் துரத்தி விட்டான். நான் என்ன செய்வேன் ?'' என்று நாய் சொல்லிற்று.

"நல்லது; நீ என்னேடு வா. நாம் எங்கேயாவது போய்ப்பாட்டுப் பாடிப் பிழைத்துக் கொள்ளலாம்,'' என்று கழுதை சொல்லிற்று. நாயும் கழுதையுடன் சேர்ந்து அலைந்து திரிந்தது. எதிரில் ஒரு பூனை வந்தது. அது மிகவும் மெலிந்திருந்தது. "உமது முகம் ஏன் இப்படி வாடி இருக்கிறது?'' என்று கழுதை கேட்டது. "நான் சாப்பிட்டு மூன்று நாட்கள் ஆயின. என்னல் நடக்கவும் முடியவில்லை,'' என்று பூனை சொல்லிற்று. "நீயும் எங்களோடு வரலாம். நாம் பாட்டுக் கச்சேரி வைக்கலாம். உன் குரல் மிகவும் இனிமையாக இருக்கிறது,'' என்று கழுதை சொல்லிற்று.

பூனையும் அவர்களுடன் புறப்பட்டது. தோழர்கள் மூவரும் ஒரு தோட்டத்திற்கு வந்து சேர்ந்தனர். அங்கே ஒருசேவல், "கொக்கரக்கோ, கொக்கரக்கோ,'' என்று ஓயாமல் கூவிக்கொண்டே இருந்தது. "ஏன் இப்படிக் கூவுகிறீர்?'' என்று கழுதை கேட்டது. "நாளைக்கு என்னைப் பலியிட்டுப் பொங்கல் வைக்கப் போகிறார்கள். என் தலையே போய்விடும்போல் இருக்கிறது. நான் என்ன செய்வேன்!'' என்று சொல்லி அது அழுதது.

"அப்படியானால் நீரும் எங்களுடன் வாரும். உம்முடைய பாட்டும் நன்றாய் இருக்கிறது. எல்லோரும் விருப்பமுடன் கேட்பார்கள்," என்று கழுதை



சொல்லிற்று. சேவலும் அவர்களுடன் சேர்ந்து கொண்டது.

II

நான்கு தோழர்களும் ஒரு காட்டின் வழியே போய்க்கொண்டிருந்தார்கள். இரவு வந்ததும் தங்குவதற்கு இடம் தேடினார்கள். சேவல் மரத்தின்மேல் ஏறிப் பார்த்தது. சற்றுத் தொலைவில் வெளிச்சம் தெரிந்தது. "விளக்கு வெளிச்சம் தெரிகிறது. அங்கே ஏதாவது வீடு இருக்கவேண்டும்," என்று சேவல் சொல்லிற்று. "நாம் அங்கே போய்க் கொஞ்சம் இளைப்பாறலாம்," என்று கழுதை சொல்லிற்று.

நால்வரும் வீட்டை நோக்கிப் புறப்பட்டனர். அந்த இடத்தை அடைந்ததும் கழுதை வீட்டிற்குள் எட்டிப் பார்த்தது. "உள்ளே யாராவது இருக்கிறார்களா?" என்று சேவல் கேட்டது.

உள்ளே கொள்ளைக் கூட்டத்தினர் இருந்தனர். அவர்கள் கொள்ளையடித்துக் கொண்டுவந்த பணத்தையும் நகைகளையும் பங்கிட்டுக்கொண்டு இருந்தனர். சாப்பாடும் தின்பண்டங்களும் நிறைய வைக்கப்பட்டிருந்தன. நான்கு தோழர்களும் சேர்ந்து ஒரு சூழ்ச்சி செய்தனர். கொள்ளைக்காரர்களை வெளியில் துரத்துவதற்கு வழிதேடினர்.

கழுதை தன் முன்னங் கால்களைத் தூக்கி வாசற் படியின்மேல் வைத்துக்கொண்டது. நாய் அதன் முதுகின்மேல் ஏறிக்கொண்டது. பூனை நாயின் முதுகின்மேல் நின்றுகொண்டது. சேவல் பூனையின் தலைமேல் உட்கார்ந்துகொண்டது. கழுதை தலையை அசைத்தவுடன் எல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து பாடத் தொடங்கின. அதுபோன்ற பாட்டுக் கச்சேரி எங்கும் கேட்டிருக்க முடியாது! கழுதை கத்திற்று. நாய் குரைத்தது. பூனை 'மியா மியா' என்று கத்திற்று. கோழி கொக்கரித்தது. வீடெல்லாம் அதிரும்படி கச்சேரி நடந்தது.

கொள்ளைக்காரர்கள் திடுக்கிட்டு, "ஓ, பேய்களும் பிசாசுகளும் வந்து கத்துகின்றன; ஐயோ! இனி என்ன செய்யலாம்!" என்று சொல்லிக்கொண்டு நடு

நடுங்கினர், பின்பு அவர்கள் ஒன்றும் தோன்ருமல் வீட்டின் பின்வாசல் வழியாகவே ஒரே ஓட்டம்



பிடித்தனர். தோழர்கள் நால்வரும் குதித்துக் கொண்டு வீட்டிற்குள் நுழைந்து, அங்கே வைத்திருந்த தின்பண்டங்களை யெல்லாம் வயிறு புடைக்கத் தின்ருர்கள். பசியாறியபின், விளக்கை அணைத்துவிட்டுப் படுத்து உறங்கினர். கழுதை வாசலில் படுத்துக்கொண்டது. நாய் வாசற்படியில் படுத்துக்கொண்டது. பூனை சமையல் அறையில் படுத்து உறங்கிற்று. சேவல் மேடைமேல் ஏறிப் படுத்துக்கொண்டது.

III

சிறிதுநேரம் கழித்துக் கள்வர் தலைவன், ஒரு முரடனை வீட்டினுள் போய்ப் பார்த்து வரும்படி

அனுப்பினான். முரடன் மெள்ள வீட்டிற்குள் நுழைந்தான். ஒரே இருட்டாய் இருந்தது. விளக்கை ஏற்றலாம் என்று சமையல் அறைக்குச் சென்றான். பூனையின் கண்கள் விளக்கைப்போல் எரிந்தன. தீக் குச்சியைக் கொளுத்திப் பூனையின் கண்களுக்கு அருகில் கொண்டுபோனான்.

பூனை சட்டென்று அவன்மேல் பாய்ந்து, அவன் முகத்தைத் தன் நகங்களால் நன்றாய்க் கீறிவிட்டது. கள்ளன் அலறிக்கொண்டு வாசல் பக்கம் ஓடினான். வாசற்படியிலிருந்த நாய் அவன் காலை அப்படியே கடித்தது. அவன் அங்கிருந்து கதறிக்கொண்டு ஓடிப்போய் வாசலில் படுத்திருந்த கழுதையின்மேல் விழுந்தான். கழுதை அவனுக்கு நல்ல உதை கொடுத்தது. கோழியும் விழித்துக்கொண்டு "கொக்கரக்கோ," என்று கூவிற்று.

கள்ளன் திரும்பிப்பாராமல் ஓட்டம்பிடித்தான். அவன், தன் தலைவனிடம் போய், "வீட்டிற்குள் பேய்களும் பிசாசுகளும் இருக்கின்றன. ஒரு பிசாசு என் முகத்தை எல்லாம் கீறிவிட்டது. ஒரு பூதம் என் காலைக் கடித்துவிட்டது. மற்றொரு பெரிய கரும்பூதம் என்னை உலக்கையினால் அடித்தது. ஒரு பேய் கூரையின்மேல் உட்கார்ந்துகொண்டு, 'யார் அவன்? என்ன செய்தான்?' என்று கேட்டது. நான் ஒரே ஓட்டமாய் ஓடிவந்துவிட்டேன். நாம் இனிமேல் அங்கே போகவே முடியாது," என்று சொன்னான்.

கொள்ளைக்காரர்கள் அங்கிருந்து ஓடிவிட்டனர். அவர்கள் மறுபடியும் அந்தப் பக்கமே எட்டிப்பார்க்கவில்லை. எல்லோரும் வேறு இடத்திற்குக் குடிபோய்விட்டனர். கழுதைக்கு அந்த இடத்தை விட்டுப்போக மனம் வரவில்லை. கழுதையும் அதன் நண்பர்களும் அங்கேயே பாட்டுப் பாடிக்கொண்டு தங்கள் காலத்தைக் கழித்துவந்தன.

"கழுதையின் பாட்டால் திருடரெலாம்
கதறியோ டியதோர் கதைகற் றோம்."

### அருஞ் சொற்கள்

| | | |
|---|---|---|
| இளைப்பாறல் | கொளுத்தி | தொலைவு |
| உலக்கை | கொள்ளையடி | தோழர் |
| கச்சேரி | திடுக்கிட்டு | முரடன் |
| கரும்பூதம் | தின்பண்டம் | வண்ணான் |
| கூரை | துரத்து | வாசற்படி |

## கக. ஆல்மரமும் நாணலும்

ஆற்றங் கரை அதனில் அழகான ஆலமரம்
நாற்புறமும் விழுதாகி நன்றாய்ப் பரந்ததுவே

ஓங்கி வளர்ந்திருந்தே ஒன்றாய்த் தழைத்திடவே
பாங்கில்சென் றோரெல்லாம் பண்பாய்ப் புகழ்ந்தாரே

அங்கேநாணல்புல்லும் அருமையாய்ச் செழித்
தோங்கி
மங்காச் சிறப்போடு மாண்பாய் வளர்ந்தனவே

வெள்ளம் பெருகிவந்தால் வெள்ளம் ஓடும்வழியே
மெள்ள வளைந்துவிடும் மெள்ள நிமிர்ந்துவிடும்

காற்று வீசும்போது கடுகித் தலைசாய்க்கும்
காற்று வீசிநின்றால் கடுகித் தலைநிமிரும்.



ஆல மரம் அதனை ஆற்ற இகழ்ந்துபேசி,
"ஞால மெலா மிகழ நாணித் தோற்றாயே.

சீச்சீ எனைப்பாராய் சிறப்பாய்நிற் கின்றே"னென்
றேச்சும் பலகூறி ஏமாப் புடன் இருக்க

நாணல் இதைக்கேட்டும் நாணுமல் இருந்துவர
கோணல் பெருங்காற்றுக் கொடுமையாய் ஒருமாலை

சுழன்று சுழன்றடித்துச் சுற்றிலும் வீசியதே
சுழன்றே பல மரங்கள் சுற்றிலும் வீழ்ந்தனவே.



வளையாத ஆலமரம் வளைந்து அலைந்தலைந்து
கிளைகள் ஒடிந்துவிழக் கீழ்வேரும் அற்றுவிட

முறிந்து விழுந்ததுவே முன்போல நாணல்களோ
சிறிது வளைந்திருந்து சிறப்பாய் நிமிர்ந்தனவே.

**அடக்கம் அமரராக்கும் ஆன்ரோர் பழமொழியாம்**
அடக்கம் உடையவரே அழியாது வாழ்ந்திடுவார்.

கழகக் கதைச் செல்வம்

முற்றும்

